9th August 1960]

அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்திருக்கிறதா? அப்படியானல், அதைப் பரிசிலனை செய்து மேற்கொண்டு பத்து அடி உயர்த்த அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI P. KAKKAN: அந்தத் தகவல் என்னிடம் இப்பொழுது இல்லை. கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

SRI M. KALYANASUNDARAM: தற்சமயம் இருக்கும் நிலைமையைப் பார்க்கும்போது மேட்டூர் அணையில் அளவுக்கு மேல் தண்ணீர் வந்து அபாயம் ஏற்படுவதாக இல்லை. அதற்கு மாருக, அங்கு வரவேண்டிய அளவு தண்ணீர் வராததால் ஏற்படக்கூடிய அபாயம் இருக்கிறது. வழக்கமாக வரவேண்டிய ஜலம் வர என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

THE HON. SRI P. KAKKAN: மெர்க்காராவில் நன்ருக மழை பெய்தால் தண்ணீர் தாராளமாக வரும். இப்பொழுது தண்ணீர் நன்ருக வந்துகொண்டிருக்கிறது. இன்றைய தினம் 95 அடி உயரத்திற்குத் தண்ணீர் அதிகமாக வந்திருக்கிறது.

MR. SPEAKER: Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

II.—ADJOURNMENT MOTION *re* NON INCLUSION OF DEVELOPMENT OF TUTICORIN PORT IN THE THIRD FIVE-YEAR PLAN.

MR. SPEAKER: I have received notice of an adjournment motion from hon. Member Sri M. Kalyanasundaram. He wishes to move for the adjournment of the House to discuss a matter of urgent public importance, viz., the failure of the Government to secure the approval of the Planning Commission for inclusion in the Third Five-Year Plan of the Tuticorin Port for development into a major all-weather port as an integral part of the Sethusamudram Project which concerns the interests of Madras State as a whole. How is the matter relevant to be discussed in this House? Will the Hon. Member explain?

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, நம்முடைய சபையில் அமைச்சர்கள் அடிக்கடி உறுதி கூறி வந்திருக்கிருர்கள். தூத்துக்குடித் துறைமுகத்தை ஒரு பெரிய துறைமுகமாகக் கட்டாயம் அபிவிருத்தி செய்வதற்குள்ள நடவடிக்கை எடுக்கப்படும் என்று சொல்லி வந்திருக்கிருர்கள். ஒரு விசேஷ தீர்மானம் கூட இந்தச் சபையில் கொண்டுவரப்பட்டு இங்கே விவாதிக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சமயத்தில் அமைச்சர் உறுதி அளித்திருக்கிருர். அந்தத் தீர்மானம் விவாதிக்கப்பட்டு பல வருஷங்கள் இருக்கும். சமீபத்தில் செய்திகளிலிருந்து பார்க்கும்போது, இந்தத் துறைமுகம் இப்பொழுது அபிவிருத்திக்கு எடுத்துக்கொள்ளப்படாது என்பது தெரிய வருகிறது. நமது அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது

[Sri M. Kalyanasundaram] [9th August 1960

என்பதுதான் நாம் இப்பொழுது குறிப்பாக கவனிக்க வேண்டியது. இந்தச் சபைக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி எடுத்த நடவடிக்கை என்ன, அதற்குக் குந்தகம் என்ன என்று சொல்லப்படவில்லை. தூத்துக்குடித் துறைமுகம் தமிழகத்திற்கு முக்கியமானது. சென்னையில் ஒரு துறைமுகம் இருந்தாலும், அது தமிழகத்திற்கு மட்டும் அல்லாமல் அண்டை ராஜ்யங்களுக்கும் பயனளிக்கக்கூடியதாக இருக்கிறது. தூத்துக்குடித் துறைமுகம் அபிவிருத்தி அடைந்தால் தமிழகத்தின் தென் ஜில்லாக்களுக்கு அது உபயோகமாக இருக்கும். அதோடு, சேது சமுத்திரத் திட்டத்தின் ஒரு முக்கிய பாகமாக தூத்துக்குடித் துறைமுகம் பெரிய துறைமுகமாக அபிவிருத்தி அடைய வேண்டும் என்பது திட்டம். தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தி கைவிடப்பட்டால், சேதுசமுத்திரத் திட்டமும் கைவிடப்படும் என்ற சூசகம் இருக்கும் காரணத்தால் அரசாங்கம் இது சம்பந்தமாக அவசர நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அமைச்சருடைய கவனத்திற்குக் கொண்டுவருகின்றேன். கவர்னர் உரையின்மீது விவாதம் நடந்துகொண்டிருக்கிறது என்று தெரிந்தும், இதன் முக்கியத்துவத்தை முன்னிட்டு அந்த விவாதத்தின்போதுகூட குறிப்பிடவேண்டிய அளவுக்கு தமிழகத்திற்கு முக்கியமானது ஆகையால் இதை இப்பொழுது விவாதிக்கவேண்டுமென்று நான் வற்புறுத்த விரும்புகிறேன்.

MR. SPEAKER: May I know what is the Government's responsibility in this matter?

SRI S. LAZAR: Is the hon. Member, Sri Kalyanasundaram moving the motion?

MR. SPEAKER: I am asking the hon. Member Sri M. Kalyanasundaram what the urgency is?

SRI S. LAZAR: That will arise only after the Speaker gives consent to the hon. Member, Sri Kalyanasundaram to move the motion. Then only he may be allowed to say anything on that.

MR. SPEAKER: I shall give my ruling after hearing the Hon. Minister.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, முதன் முதலில் இதை ஒத்திவைப்புப் பிரேரணையாக எடுத்துக்கொள்ளவேண்டுமா, வேண்டாமா என்பது ஒருபுறமிருக்க, இது மிகவும் முக்கியமான விஷயம் என்பதைப்பற்றிக் கருத்து வேற்றுமையே இருக்க முடியாது. தூத்துக்குடித் துறைமுகத்தினுடைய அபிவிருத்தி, அத்துடன் சேதுசமுத்திரத் திட்டம் இந்த இரண்டுமாகச் சேர்ந்து எடுக்கப்படவேண்டும் என்பதைப்பற்றி இந்த அரசாங்கம் தொடர்ந்து வற்புறுத்திக் கொண்டு வந்திருக்கிறது. திரு. ராமசாமி முதலியார் அவர்களைத் தலைவராகக் கொண்டு, இங்கேயிருக்கும் நம்முடைய காரியதரிசி திரு. ஆர். ஏ. கோபாலசாமி அவர்களை ஒரு அங்கத்தினராகவும்

9th August 1960] [Sri C. Subramaniam]

காரியதரிசியாகவும் கொண்டு இங்கு நியமிக்கப்பட்ட ஒரு கமிட்டி, அதன் அறிக்கையைச் சமர்ப்பித்திருப்பது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிந்திருக்கும். அதிலே, பத்து கோடி ரூபாய் செலவழித்து இந்த இரண்டு திட்டங்களையும் நிறைவேற்றமுடியும் என்று கண்டிருக்கிறது. இந்த அறிக்கை சமர்ப்பிக்கப்பட்ட போது, மத்திய அரசாங்கத்திலே இருக்கும் அந்த இலாக்கா இதைப் பரிசீலனை செய்து பார்த்து, 'பத்து கோடி ரூபாய் அளவிலே முடியாது, முப்பது கோடி ரூபாய் செலவாகும்' என்று அவர்கள் கணக்குக் கொடுத்து இருக்கிறார்கள். முப்பது கோடி ரூபாய் அளவிலே செலவு செய்யவேண்டியது அவசியமா என்று பரிசீலனை செய்யவேண்டும் என்ற முறையிலே இருந்துவந்தது.

இதிலே இரண்டு பகுதிகள் இருக்கின்றன. தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தி ஒன்று. அதற்குப் பிற்பாடு சேது சமுருத்திரக் கால்வாய் வெட்டி, வரக்கூடிய கப்பல்கள் இலங்கையைச் சுற்றிக்கொண்டு வராமல், நேரடியாக இலங்கைக்கும் இந்தியாவுக்கும் மத்தியிலே நம்முடைய கடற்பகுதியிலே போகக்கூடிய முறையில் ஏற்பாடு செய்வதன் மூலமாக, கடலோரங்களிலே செல்லும் கப்பல்களுக்கு அதிக தூரம் அதன் மூலமாகக் குறைக்கப்படுகிறது என்ற காரணத்தினால் இதை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சொல்லியிருந்தோம். 9–30 a.m.

சேதுசமுத்திர திட்டத்தைப்பற்றி கொஞ்சம் தாமதமாக யோசித்துப்பார்த்தாலும்கூட, தூத்துக்குடி துறைமுகத்தைப் பற்றி உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். இதற்கு மத்தியிலே மத்திய அரசாங்கம் 'இண்டர்மிடியட் போர்ட்ஸ் டெவலப்மெண்ட் கமிட்டி' என்ற குழுவை நியமித்து, இந்தியாவிலே பல்வேறு பகுதிகளிலே இருக்கக்கூடிய சிறு துறைமுகங்களை, மத்திய துறைமுகங்களைப் பரிசீலனை செய்து பார்த்து, எந்தத் துறைமுகங்களை அபிவிருத்தி செய்யவேண்டும் என்பது பற்றி சிபார்சு செய்யும்படி கேட்டுக்கொண்டார்கள். அந்தக் கமிட்டி எல்லாத் துறைமுகங்களையும் பரிசீலனை செய்து பார்த்த பிற்பாடு தூத்துக்குடிக்கு முதல் இடம் கொடுத்து 10 கோடி ரூபாய் அளவிலே இதை அபிவிருத்தி செய்வதற்கு சிபார்சு செய்திருக்கிறார்கள். இந்த நிலைமையில்தான் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதை எடுத்துக்கொள்ள முடியுமா என்பதைப்பற்றி பரிசீலனையில் இருந்துவருகிறது. இன்னும் இறுதியாக ஒன்றும் முடிவு ஏற்படவில்லை. ஆனால், தற்போதைக்கு தூத்துக்குடி, மங்களூர் துறைமுகங்களை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று மத்திய சர்க்கார் துறைமுக இலாகா எழுதியதின் காரணமாக, இரண்டையும் எடுத்துக்கொள்ளுவதற்கு இப்பொழுது நிதி வசதி இல்லை என்கிற முறையில் பிளானிங் கமிஷன் அதனுடைய அபிப்பிராயத்தை சொல்லியிருக்கிறது. இன்னும் முடிவு ஒன்றும் எடுக்கப்படவில்லை. சென்னை சர்க்காரைப் பொறுத்தவரையில், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சில பணிகளை கட்டாயம் எடுத்துக்

கொள்ளவேண்டும் என்கின்ற ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். பல்வேறு விஷயங்களையும் பரிசீலனை செய்து பார்த்து மற்றவைகள் தானாக நடக்கலாம், நடக்காமல் போகலாம், ஆனால் அடிப்படையில் சில திட்டங்களை நிறைவேற்றினால்தான் தமிழ் நாட்டு பிற்கால அபிவிருத்தி அதன் அடிப்படையில் ஏற்படமுடியும் என்ற காரணத்திற்காகச் சில திட்டங்களுக்கு முதலிடம் கொடுத்து இவைகளை எப்படியாவது சாதித்தாகவேண்டும் என்கிற தற்கால முடிவை எடுத்திருக்கிறோம். அப்படி எடுத்திருக்கிற முடிவுகளில் தூத்துக்குடி துறைமுகம் ஒன்று. அந்த முறையிலே மறுபடியும் மத்திய அரசாங்கத்திற்கும் பிரதம மந்திரி அவர்களுக்கும் இதைப் பற்றி எடுத்துச் சொல்லி இதைக் கட்டாயம் சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்வதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே, இதுபற்றி ஒரு ஒத்திவைப்பு தீர்மானம் கொண்டு வந்து பரிசீலனை செய்யக்கூடிய அவசியம் ஒன்றும் ஏற்படவில்லை. இந்த விஷயத்தில் முடிவு செய்ய வேண்டிய பொறுப்பு மத்திய சர்க்காரிடத்தில் இருக்கிறது. ஆனால் மத்திய அரசாங்கம் நல்ல முடிவு எடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டிய கடமை நமக்கு இருக்கிறது. ஆகையினால் கவர்னர் உரையின் விவாதத்தில் பேசும்பொழுது இதைப் பற்றி விவாதிக்கலாம். அதற்கு அடுத்தாற்போல் என்னைப் பொறுத்தவரையில், இந்த அசெம்பளிக் கூட்டத்திலேயே செப்டம்பர் 5-ம் தேதி கூடுகிறபொழுதோ, அதற்கு முன்னாலேயே, இரண்டு நாட்கள் ஒதுக்கிவைத்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி இந்தச் சபை விவாதிக்க வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன். அப்படி விவாதிக்கும்பொழுது சில திட்டங்களை எடுத்து, அந்தத் திட்டங்களை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்கின்ற முறையில் நாம் எல்லோரும் ஏகமனதாக அதுபற்றி யோசனை சொல்வோமானால் அவைகளைப்பற்றி வற்புறுத்துவதற்கு இன்னும் அதிக பலம் ஏற்படும். ஆகையினால், இதுபற்றி ஒரு ஒத்திவைப்புத் தீர்மானத்தை இப்பொழுது ஏற்றுக் கொள்ளுவதற்கு இடம் இல்லை. விஷயம் ரொம்பவும் முக்கியமானது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அதுபற்றி எல்லா விதமான நடவடிக்கையையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளும். அதற்கு இந்தச் சபையினுடைய ஆதரவு மட்டுமல்ல, மக்களுடைய முழு ஆதரவும் இருக்கும் என்பதில் சந்தேகமே கிடையாது.

Sri K. ANBAZHAGAN : On a point of information, Sir, on the subject explained by the Hon. Minister . . .

Mr. SPEAKER : Normally I should not have allowed any discussion on this matter. This matter being very important I allowed the hon. Member and the Hon. Minister to speak. The hon. Member Sri Lazar has objected to even the hon. Member Sri Kalyanasundaram speaking on the same. I am sure he would object even to the elaborate statement of the Hon. Minister. Anyway, there has been some discussion. From that I am clear that there is no ministerial responsibility in this matter. The

hon. Member can speak on this subject as much as he likes when he speaks on the Governor's Address and the Hon. Minister will reply to it. I, therefore, feel that I cannot allow any further discussion on the matter.

I rule this adjournment motion out of order.

## III.—PRIVILEGE MOTION *re* ARREST OF SRI M. KALYANASUNDARAM.

MR. SPEAKER: The hon. Member Sri M. Kalyanasundaram has given notice of a matter of privilege with regard to his recent arrest under Section 151, Cr.P.C. He contends that his arrest involves a breach of privilege for the following reasons:—

(1) that his arrest and detention under Section 151, Cr.P.C., is not an arrest under criminal charge or under Public Safety Act as that Section authorises a police officer to arrest without warrant;

(2) that the House has not been informed of the reasons of arrest;

(3) that he was residing in the Legislators' Hostel and preparing for the ensuing session and was thus prevented from doing the Legislature work; and

(4) that he was arrested within the immunity period of 40 days.

Some Members rose.

MR. SPEAKER: I am not going to allow any speeches. The matter is very important, I quite agree. So far as I am aware I think there is no precedent for this matter. I should like the Leader of the House and the hon. Member Sri M. Kalyanasundaram to give their views on the subject on a subsequent date. After hearing their views I will give my ruling. When will the House like to take it up?

THE HON. SRI C. SUBRAMANIAM: It may be taken up on the 18th.

MR. SPEAKER: I will take it up on the 18th August.

Sri Lazar rose.

MR. SPEAKER: The hon. Member, being the Chairman of the Committee of Privileges, will not insist on speaking on that date.

SRI K. VINAYAKAM: Has the hon. Member Sri M. Kalyanasundaram been subsequently released?

MR. SPEAKER: Otherwise he cannot be in this House. I must tell the House that as soon as he was arrested, the Speaker was intimated of his arrest and was given the reasons for the arrest.

SRI M. KALYANASUNDARAM: The House was not informed.